# பொங்கல் பரிசு

நினைத்தாலும் உள்ளத்திலே ஓர் இன்பக்கிளர்ச்சி மேலோங்குகிறது. நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த ஒரு சுவையான நிகழ்ச்சி. நான் அப்பொழுது — அதாவது 1928ஆம் ஆண்டில் — மாநிலக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். திருவாளர்கள் சி. சுப்பிரமணியம், ஓ. வி. அளகேசன், கே. எஸ். பெரியசாமி, கே. எஸ். பழநிசாமி, ஏ. அளகிரிசாமி, டாக்டர் ல. கி. முத்துசாமி முதலான பலரும் அன்று கல்லூரி மாணவர்கள். நாங்களும் இன்னும் பல கல்லூரி மாணவர்களும் சேர்ந்து ஒரு சங்கம் அமைத்துக் கொண்டிருந்தோம். அதன் வாயிலாக, 'பித்தன்' என்ற ஒரு திங்கள் இதழை வெளியிட்டோம். நாட்டின் விடுதலையிலும் தமிழின் முன்னேற்றத்திலும் பித்துக்கொண்டவர்கள் நடத்தும் இதழ் ஆகையால் அது பித்தன் என்ற பெயர் தாங்கிற்று. அந்தக் காலத்தில் 'ஆனந்தபோதினி' ஒரு மாத இதழ். பேராசிரியர் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி அவர்களை ஆசிரியராகக் கொண்டிருந்த 'ஆனந்தவிகடன்' அப்பொழுது திங்கள் இதழாகவே இருந்தது. 'லோகோபகாரி,' 'நவசக்தி' வார இதழ்கள். வேறு குறிப்பிடத்தக்க பத்திரிகைகள் இருந்ததாக எனக்கு நினைவில்லை.

பித்தனுக்கு நான் வெளியீட்டாளனாகவும், தமிழ் முனிவர் திரு. வி. க. அவர்கள் அச்சிடுபவராகவும் பதிவு செய்துகொண்டு 64 பக்கங்களில் இதழ் வெளியாயிற்று. தொடக்கத்தில் ல. கி. முத்துசாமி பித்தனுக்கு ஆசிரியர். பிறகு நான்கு பேர் கொண்ட ஆசிரியர் கழகம் அமைந்தது. அலுவலகச் செலவோ, வேறு செலவுகளோ இன்றி அதை நடத்தினோம். புது முறையிலே கட்டுரைகள், கதைகள், கவிதைகள் எல்லாம் அவற்றில் வெளியாயின. பாலபாரதி ச. து. சு. யோகியார் 'பேயன்' என்ற புனைபெயரில் அதில் கவிதை எழுதினார். 'பித்தன்' இதழ்களைப் பார்த்துவிட்டு

திரு. ராஜாஜி அவர்கள் ''காரணம் தெரியாது; நான் பித்தன் மேல் மோகம் கொண்டுவிட்டேன்; அவ்வளவுதான் சொல்லலாம்,'' என்று மகிழ்ச்சியைத் தெரிவித்திருந்தார்.

'பித்தன்' கழகத்திலே அவ்வப்போது கூட்டங்கள் நடைபெறும். நாங்கள் வசித்து வந்த மாணவர் விடுதியே அதிரும்படியாகக் காரசாரமான விவாதங்கள் இருக்கும். இப்படிபட்ட ஒரு கூட்டத்திலே கிறிஸ்துமஸ் வாழ்த்து மடல்களைப்போலப் பொங்கல் விழாவுக்கும் நாம் பொங்கல் வாழ்த்து அனுப்பவேண்டும் என்று நானும் வேறு சிலரும் வற்புறுத்தினோம். அக்காலத்தில் பொங்கல் வாழ்த்து அனுப்பும் வழக்கம் பழக்கத்திற்கு வரவில்லை. எங்களில் ஒரு சில தீவிரவாதிகள், ''நாம் எதற்காக மேல்நாட்டாரின் வழக்கத்தைப் பின்பற்ற வேண்டும், அது அடிமை மனப் பான்மையின் அறிகுறி'' என்று பேசினர். வர வர சூடு அதிகமாய் விட்டது.

இறுதியில் இதைக் கழகத்தின் கொள்கையாகக் கொள்ள வேண்டியதில்லை என்றும், விருப்பமுடையவர்கள் பொங்கல் வாழ்த்து சொந்த முறையில் அனுப்பலாம் என்றும் முடிவுக்கு வந்தோம். பொங்கல் வாழ்த்து அனுப்ப வேண்டும் என்று வாதித்த கட்சியைச் சேர்ந்தவன் நான். ஆனால் அதை நம் நாட்டிற்கு ஏற்பப் புதுமுறையில் செய்யவேண்டும் என்பது என் விருப்பம்.

கொங்கு நாட்டில் விவசாயப் பண்ணைகளின் மத்தியில் அமைந்தது எங்கள் ஊர். அங்கிருந்து நல்ல அகலமான குருத்துப் பனை ஓலைகளைக் கொணர்ந்து அவற்றை அழகாக நறுக்கி வண்ண மைகளைக் கொண்டு அழகு செய்து வாழ்த்து எழுதி நாங்கள் அனுப்பினோம். திரு. வி. க., பேராசிரியர் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி, அப்போது எங்களுக்குத் தமிழ் ஆசிரியராக இருந்த கா. நமச்சிவாய முதலியார் முதலிய பலருக்கு இவை அனுப்பப்பட்டன. இந்த வழக்கம்

வரவேற்கத் தகுந்தது என்று கருதி இம்மூவரும் திரு. வி. க. அவர்கள் வெளியிட்ட நவசக்தியில் பொங்கல் வாழ்த்து அனுப்பவேண்டுமென்று தமிழ் மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தனர். பொங்கல் வாழ்த்து அனுப்பும் பழக்கம் வேக மாகப் பரவிற்று.

இப்போது பார்த்தால் எத்தனையோ வகையான வண்ணப் படங்களோடு பொங்கல் வாழ்த்துகள் வருகின் றன. பொங்கல் நம் உள்ளம் கவரும் விழா அல்லவா ?

என் நண்பர் கே. எஸ். பெரியசாமி 1930ஆம் ஆண்டில் விக்டோரியா மாணவர் விடுதியிலிருந்து பொங் கலுக்காக சொந்த ஊர் சென்றிருந்தார். எங்கள் ஊர்ப் பக்கங்களில் பண்ணையிலே மாட்டுப் பொங்கலே பெரிய திருநாள். ஆதலால் அவர் போகும்படியாயிற்று. அவரைப் பிரிந்திருந்த நான் அவருக்குப் பொங்கல் வாழ்த் தோடு வேறு ஒரு புதிய இலக்கியப் பரிசினையும் வழங்க விரும்பினேன்.

பொங்கல் வாழ்த்து என்ற தலைப்பிட்டு ஒரு சிறிய அழகான நோட்டுப் புத்தகத்தில் பக்கத்திற்கு ஒன்றாகப் பல கவிதைத் துணுக்குகளை எழுதி அவருடைய பெட்டியிலே மறைவாக வைத்து விட்டேன்.

அந்தப் பொங்கல் பரிசில் நானே சொந்தமாக எழுதி யவைகளும், கவி ரவீந்திரநாத தாகூரின் பட்டிப் பறவைகள் (*Stray Birds*) என்ற நூலிலிருந்து மொழி பெயர்த்தவை களுமாக சிறு சிறு கவிதைத் துணுக்குகள் அடங்கியிருந்தன. நானே எழுதிய நீண்ட கவிதைகளும் இடம் பெற்றன.

பல ஆண்டுகள் வரை அந்தப் பொங்கல் பரிசைக் காப் பாற்றி வைத்திருந்து பிறகு அவர் அதை என்னிடம் கொடுத்து நூலாக வெளியிடும்படிக் கூறினார்.

அதிலுள்ள கவிதைத் துணுக்குகளும், எண்ணத் துணுக்குகளும் புதியதோர் வலிமையோடு என்னைக் கவர்ந்தன. அதன் விளைவாக இந்த நூல் உருவாயிற்று.

நான் எழுதிய நீண்ட கவிதைகள் 'இளந்தமிழா' என்ற தலைப்புள்ள என் கவிதைத் தொகுப்பில் சேர்ந்துவிட்டன. தாகூரின் சிறு துணுக்குகளும் நான் எழுதிய துணுக்குகளும் இந்நூலில் இடம் பெறுகின்றன. தாகூரின் நூலிலிருந்து மொழி பெயர்த்தவை ஐம்பது. நானே எழுதியவை அறுபத்தெட்டு.

இவற்றைப் படிக்கும் அன்பர்களிடம் நான் ஒன்று கேட்டுக்கொள்கிறேன். ஒரே மூச்சில் எல்லாவற்றையும் படிக்காதீர்கள். ஏதாவது ஒன்றைப் படித்துவிட்டு அதையே சற்று அமைதியாகச் சிந்தித்துப் பாருங்கள்.

அப்படிப் படித்த பலர் பாராட்டியதால் இந்த நூல் மூன்றாவது பதிப்பாக இந்த ஆண்டு பொங்கல் திருநாளன்று வெளியாகிறது.

பொங்கலோ பொங்கல்! இன்பம் பொங்குக!

பொங்கல் திருநாள்
1969

— பெ. தூரன்

* நண்பர்களுடன் தூரன் நடத்திய பத்திரிக்கையின் பிரதி

252







## பொருளடக்கம்





காலச்சக்கரத்தில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

## அட்டைப் படம்

துணைவியில் வரும் ஒரு கட்டத்தைச் சித்தரிக்கும் படமே இவ்வார இதழ் அட்டையில் நீங்கள் பார்க்கிறீர்கள். அந்தக் கதைப் பகுதியைப் போன இதழில் நீங்கள் படித்திருப்பீர்கள்.

# காலச்சக்கரம்



(ஞாயிறு தோறும் வெளிவரும் வாரப் பத்திரிகை)

## பொருளடக்கம்



காலச்சக்கரத்தில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

## எழுத்தாளர்களுக்கு.....

வணக்கம். காலச்சக்கரத்திற்குப் பலர் எழுத்தோவியங்கள் அனுப்புகிறீர்கள். மிக்க மகிழ்ச்சி. ஆனால் இந்த மகிழ்ச்சியிலே ஓரளவு சங்கடமும் கலந்திருக்கிறது என்பதை நாங்கள் சொல்லாமலிருக்க முடியவில்லை.

எழுத்தோவிய சம்பந்தமாகச் சில விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டால் எல்லோருக்கும் சௌகரியமாக இருக்கும் என்பதை நாங்கள் குறிப்பிட விரும்புகிறோம்.

1. எழுத்தோவியங்களைத் தெளிவாக ஒரே பக்கத்தில் எழுத வேண்டும்.
2. ஏற்றுக்கொள்ளப்படாதவற்றைத் திருப்பிப் பெற அவற்றுடனேயே போதிய தபால்தலை அனுப்பவேண்டும். சிலர் எழுத்தோவியத்தை முன்னால் அனுப்பிவிட்டுப் பிறகு ஏதாவது ஒரு நாள் தபால்தலை அனுப்புகிறார்கள். அப்படி அனுப்பினால் எழுத்தோவியம் திரும்பிக் கிடைக்காது.
3. கவிதை, அறிவூட்டிய அனுபவம், விகடத் துணுக்குகள், கடிதங்கள் — இவற்றை எக்காரணங்கொண்டும் திருப்பி அனுப்ப இயலாது. அவைகளை வேண்டுமென விரும்புவோர் முன்பே நகல் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

எழுத்தோவியம் ஏற்றுக்கொள்ளப்பட்டதா இல்லையா என்று அடிக்கடி கடிதம் எழுதினால் பதில் அளிப்பது சாத்தியமாக இல்லை. ஆசிரியர் குழுவின் திட்டப்படி ஏற்றுக்கொள்ளப்பட்டவை உரிய காலத்தில் வெளியாகும்.

கடைசியாக இன்னுமொரு முக்கிய விஷயம். உங்கள் விலாசத்தை எழுதி அனுப்ப மறந்துவிடாதீர்கள்.

அன்பு.

ஆசிரியர்கள்.

# தாய்மொழியில் உயர்தரக் கல்வி

ம. ப. பெரியசாமித்தூ!

பல ஆண்டுகளாக அடிமைப் பட்டுக் கிடந்து விட்டு இப்பொழுது நாம் சுதந்திர மடைந்திருக்கிறோம். நமது நாட்டை முன்னேற்ற மடையச் செய்வதற்கு எத்தனையோ துறைகளில் இன்று வேகமாக வேலை செய்ய வேண்டியிருக்கிறது. எல்லாத் துறைகளையும் விடக் கல்வித் துறைதான் அதி முக்கியம் என்பது என்னுடைய அபிப்பிராயம். மக்கள் அனைவருடைய அறிவைப் பெருக்குவதன் மூலமே நாம் நமக்குக் கிடைத்த சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியும்; அதோடு மற்றத் துறைகளில் சீர்திருத்தம் அடைவதற்கும் கல்வியே முக்கிய சாதனமாக இருக்கின்றது. எல்லோருக்கும் சரியான கல்வி கிடைத்து விட்டால் இன்றுள்ள அனேக குறைபாடுகள் தாமாகவே மறைந்து போகும். மற்றத் துறைகளில் முன்னேற்ற மடைவதோ சீர்திருத்தம் செய்வதோ சுலபமாகி விடும். அதனால்தான் இதை மிக முக்கியமாக நான் கருதுகிறேன்.

எல்லோருடைய அறிவையும் உயர்த்த வேண்டுமென்றால் தாய் பாஷையின் மூலம் கல்வி கற்பிக்கப் பட்டால்தான் அது சாத்திய மாகும். ஆனால் இங்கேயும் ஒரு சங்கடம் குறுக்கிடுகின்றது. ஆங்கிலத்தை விட்டுவிட்டு எப்படி உடனே தாய் பாஷையில் கல்வி போதிக்க முடியும் என்று சந்தேகம் உண்டாகிறது. கல்வி என்றால் அது தாய் மொழியில் தான் என்பது மற்ற நாடுகளில் சொல்லாமலே ஏற்பட்டிருக்கின்றது. நாம் அவ்வாறு நினைக்க முடிவதில்லை. அடிமை வாழ்க்கையில் நமக்கு இம்மாதிரி என்னென்னவோ புதுமையான பிரச்சனைகளெல்லாம் உண்டாகி யிருக்கின்றன. ஆனால் அவற்றையெல்லாம் விவேகத்தோடு எதிர்த்து நின்று நல்ல முறையில் போக்கினால் தான் தேசம் முன்னேற்ற மடைய முடியும்.

இன்று ஹைஸ்கூல் படிப்பு வரை பாடங்கள் எல்லாம் அநேகமாகத் தாய் மொழியிலேயே கற்பிக்கப் படுகின்றன. ஒன்றிரண்டு கல்லூரிகளில் இண்டர்மீடியட் வகுப்புகளிலும் ஏதோ சில பாடங்களைத் தாய் மொழியில் கற்பிக்க முன்வந்திருக்கிறார்கள். கல்லூரியில் தாய் மொழியில் பாடம் கொடுக்க வேண்டு மென்பது இன்று கட்டாயமில்லை. இங்கே தாய் மொழி என்று நான் குறிப்பிடுவதைப் பற்றிச் சற்று ஆராய வேண்டும். தாய் மொழி யென்பதனால் ஒவ்வொருவரும் தங்கள் வீட்டில் பேசும் பாஷையை நான் குறிப்பிடவில்லை. தாய்மொழிக்கு அடுத்த ஸ்தானத்தை வகிக்கும் பிரதேச பாஷையையே குறிப்பிடுகிறேன். அதாவது தமிழ் நாட்டிலே அது தமிழ் பாஷையாகும். அதைத் தாய் மொழிக்கே சமானமாகக் கூறினால் அதற்கு எதிர்ப்புக் கூற முடியும். ஏனெனில் அது உண்மையில் அனைவருக்கும் தாய் மொழியல்ல. ஆனால் அயல்நாட்டு மொழியான ஆங்கில மொழியைவிட நன்கு தெரிந்த பாஷை. நன்கு பழக்கப் பட்ட பாஷை என்பதில் யாருக்குமே அபிப்பிராயபேதம் உண்டாகாது. மிகச் சிறுபான்மையோரான ஆங்கிலோ இந்தியர்களுக்கு மட்டும் இது விலக்காக இருக்கலாம்.

தமிழ் நாட்டில் உள்ளவர்க குத் தமிழ்தான் தாய் மொ அல்லது தாய் மொழி அடுத்ததாக நன்கு அனுப பட்ட பாஷை என்று கொ தான் நாம் மேற்கொண் யோசிக்க வேண்டும். வீ மொழியாக உள்ள பாஷை லெல்லாம் எல்லா இடங்களி உயர்தரக் கல்வி ஏற்பாடு வது சாத்தியமல்ல; விரும் தக்கதும் அல்ல என்று கருதுகிறேன். ஏனெனில் நாட்டிலே தமிழில் தான் சியலோ மற்ற பொது விவக களோ நடைபெறும். அத வேண்டிய பயிற்சி யுடைய களாக மக்களை ஆக்க வே மானால் தமிழில்தான் உயர் கல்வி அமைய வேண்டும். படித் தமிழில், படிப்பதும் மல்ல. ஏனெனில் அதுவே டிற்கு வெளியில் தினசரி வில் உபயோகப் பட்டு வருக்கும் தெரிந்திருக்கி அதைத் தாய் மொழியா கொண்டிராத மக்களுக்கும் மொழிக்கடுத்தபடியாக அ மூலம் கல்வி கற்பதே மாகும்.

உயர்தரக் கல்வியானது தேச பாஷையில் இல்லாத பொது மக்களிடையே அ வளர்ச்சி ஏற்படவில்லை. அ களின் அறிவுத் தரம் வில்லை. காரணமென்ன றால் அறிவு விஷயங்களெல் பெரும்பாலும் ஆங்கிலத்தி இருக்கின்றன. தமிழில் தால் ஓரளவு கல்வி கற் மக்கள் தாங்களாகவே அ றைப் படித்து தங்கள் அறி பெருக்கிக் கொள்வார்கள்.

# தாய்மொழியில் உயர்தரக் கல்வி

இன்று கல்வி பெறுகின்றவர்தான் பத்துப் பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு இந்நாட்டின் பிரஜைகளாக விளங்கப் போகிறார்கள். ஆதலால் பத்துப் பதினைந்து வருஷங்களுக்கு பின்பு சமூகம் எவ்வாறு இருக்கும் அல்லது எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை மனதில் கொண்டு இன்றைய கல்வித் திட்டத்தையும் மற்ற திட்டங்களையும் நாம் வகுக்க வேண்டும். இல்லாவிட்டால் வரப்போகும் சமூகத்திற்கு ஏற்ற மக்களை நாம் தயாரித்தவர்களாக மாட்டோம். நமது சமூகம் முன்னேற்ற மடையாது. இன்றைய இடைஞ்சல்களையும் குறைபாடுகளையும் இப்பொழுதே களைந்தெறிய முற்படா விட்டால் வரப்போகும் சமுதாயத்தை அவை பாதித்துக் கொண்டே இருக்கும்.

ஆதலால் இன்றே தமிழில் பாடம் சொல்லிக் கொடுப்போமென்று ஆரம்பித்தால்தான் சில வருஷங்களிலாவது எல்லாம் தமிழிலேயே கற்பிக்க முடியும். அதில் நாம் காலதாமதம் செய்யக்கூடாது. செய்ய வேண்டிய அவசியமுமில்லை. யோசித்துப் பார்த்தால் இன்று தமிழில் பாடம் கற்பிப்பதற்கு ஆக்ஷேபம் சொல்லுகிறவர்களெல்லாம் இரண்டுமூன்று இடையூறுகளையே முக்கிய காரணமாகக் கூறுகிறார்கள். கலைச் சொற்கள் இல்லையே என்ன செய்வது என்று அவர்கள் கேட்கிறார்கள். கலைச் சொற்களைப் பற்றி தாம் சிரமம் பட்டுக் கொள்ள வேண்டியதே இல்லை. உலகப் பொதுக் கலைச் சொற்களை அவசியமானவிடத்து தமிழுக்கு ஏற்றவாறு பிற்சேர்க்கை செய்தோ அல்லது உள்ளவாறே எடுத்துக் கொள்ளலாம். விரிவான மேல்படிப்புக்கு வெளிநாடு செல்லுபவர்களுக்கு இது உதவியாக இருக்கும். அதனால் இது ஒரு பெரிய இடைஞ்சலே அல்ல. புதிய கலைச் சொற்கள் உண்டாக உண்டாக அவற்றை அப்படியே எடுத்தாளவும் முடியும்.

கல்லூரிகளில் பாடப் புத்தகங்களாக வைக்க அறிவியல் நூல்கள் தமிழில் இல்லையே என்றும் கேட்கிறார்கள். பாடபுத்தகங்களை விட முக்கியமான ஆராய்ச்சி நூல்களும் கற்பிப்பதற்குத் துணையான ஆராய்ச்சி நூல்களும் இல்லையே என்றும் சொல்லுகிறார்கள். இவையெல்லாம் தாமாகவே வந்துவிடா. அந்நூல்களுக்கு உண்மையான தேவை ஏற்பட்டால்தான் தகுதி வாய்ந்தவர்கள் முன்வருவார்கள். புத்தக வெளியீட்டார்களும் அச்சிட்டு வெளியிடத் துணிவார்கள். பாடபுத்தகங்களும், ஆராய்ச்சி நூல்களும் பல படங்களுடன் வெளியிட அதிகம் பணம் செலவாகும். அவை நிறைய விற்பனையாகும் என்று தெரியாமல் யாரும் அவற்றை எழுதவோ வெளியிடவோ நினைக்க மாட்டார்கள். தமிழ் மூலம் தான் பாடம் சொல்லிக்கப்படும் என்று கட்டாயம் இல்லாவிட்டால் புத்தகங்கள் வெளிவருமென எதிர்பார்க்க முடியாது. பத்தாவது வகுப்பு வரைப் பாடங்களைத் தமிழிலும் சொல்லித் தரலாம் என்று ஒரு காலத்தில் இருந்தது. அப்பொழுது அப்படிச் சொல்லித் தர முன்வந்த பள்ளிகள் மிகச் சில. அன்று பாடப்புத்தகங்கள் வெளியாகவேயில்லை. ஆனால் முதல் முதலில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட போது தமிழில் தான் பத்தாவது வரை பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று கட்டாயம் உண்டாகவே மூன்றாவது மாதத்திலேயே பாடபுத்தகங்கள் வெளிவந்துவிட்டன. இந்த அனுபவத்தை நாம் மறந்துவிடக் கூடாது. மேலும் பாடபுத்தகங்கள் எழுதவும், ஆராய்ச்சி நூல்கள் தயாரிக்கவும் அரசாங்கம் கமிட்டிகளையும், போர்டுகளையும் உடனே நியமிக்க வேண்டும். தனிப்பட்ட முயற்சிகளையும் பண உதவி செய்து ஆதரிக்க வேண்டும். அத்துடன் அடுத்த பள்ளி ஆண்டிலோ அல்லது அதற்கடுத்த ஆண்டிலோ இன்டர்மீடியேட் முதல் வகுப்பில் எல்லாப் பாடங்களும் தமிழில் தான் போதிக்கப் படவேண்டும் என்று உத்திரவு போட்டு விடவேண்டும். அப்படித் தமிழில் படிக்கும் மாணவர்கள் மேலேமேலே செல்லும் போது கலைக் கல்லூரிகளிலும், இன்ஜினீரிங், சட்டம், வைத்தியக் கல்லூரிகளிலும் தமிழிலேயே போதனை நடக்கும் என்று அவர்களுக்கு உறுதிகூறி விடவேண்டும்.

அவ்வாறு திட்டம் வகுத்துக் கொண்டு வேலை செய்தால் இந்தக் காரியம் வெகு சுலபமாக முடிந்து விடும். இன்று நம்மிடையே விஞ்ஞானம் முதலிய சாஸ்திரங்களில் பாண்டித்யம் பெற்றவர்களுக்குக் குறைச்சல் கிடையாது. அவர்களைக் கொண்டு தமிழில் புத்தகங்களை உண்டாக்கி விடலாம். அதற்கு முதலில் நமது மனப்பான்மை மாற வேண்டும். கல்வித்துறையில் ஈடுபட்டவர்கள் இம்மாறுதலால் தங்களுக்கு ஏற்படும் சிரமங்களையே எண்ணிக் கொண்டிருக்கக் கூடாது. ஆங்கிலத்திலேயே கற்றும், போதித்தும் எழுதியும் வந்தவர்களுக்குத் தமிழில் காரியம் செய்வதென்றால் ஆரம்பத்தில் சிரமமாகத்தான் இருக்கும். ஆனால் அது வெற்றி காண முடியாத பெரிய சிரமமல்ல. சிரமமாக இருந்தாலும் அதை உத்தேசித்து அவர்கள் இனிமேல் வரப்போகும் தமிழ்நாட்டுச் சமூகத்தை மனதில் வைத்துக் கொண்டு அதற்குகந்த முறையில் காரியம் செய்ய முன்வர வேண்டும். அவ்வாறு அவர்கள் செய்யாவிடில் அவர்கள் தங்கள் கடமையில் தவறியவர்களாவார்கள்.

ஆங்கிலம் கற்காவிடில் தற்காலத்தில் புதிது புதிதாக வெளியாகிக் கொண்டிருக்கும் அறிவு உண்மைகளும் விஷயங்களும் நமக்குத் தெரியாமல் போய்விடும் என்று சிலர் சொல்லுகிறார்கள். இந்தக் காரணம் பலமற்றது என்பதைச் சுலபமாகக் காட்டிவிடலாம். இன்று ஆங்கிலத்தின் மூலம் பாடம் கற்பிக்கப் போவதில்லை என்று தீர்மானிப்பதாலேயே ஆங்கிலம் கற்றறிந்த புலவர்களெல்லாம் மறைந்துவிடப் போவதில்லை. அவர்கள் அந்த அறிவையெல்லாம் தமி-

# தாய்மொழியில் உயர்தரக் கல்வி

ழுக்குக் கொண்டுவரலாம். அதோடு ஆங்கிலத்தை ஒரு உபபாஷையாகக் கற்பதை வேண்டாமென நான் சொல்லவில்லை. அவ்வாறு படிப்பவர்கள் இருப்பார்கள். அவர்கள் இக்காரியத்தைத் தொடர்ந்து செய்ய முடியும். மேலும் தற்கால அறிவுக்கு ஆங்கிலம் மட்டும் போதுமா? வேறு மொழிப் பயிற்சியும் வேண்டியிருக்கும். ஆங்கிலத்தில் மட்டும் எல்லா விஷயங்களும் எப்படி வருகின்றன? ருஷ்ய விஞ்ஞானியோ, ஜெர்மன் வைத்திய நிபுணரோ கண்டு பிடித்த விஷயம் ஆங்கிலத்தில் எவ்வாறு வருகிறது? அம்மொழிகளைப் படிப்பவர்கள் ஆங்கில நாட்டில் இருக்கிறார்கள். அது போல இங்கும் முக்கியமான மேல்நாட்டுப் பாஷைகளைப் படித்துக் கொள்ள வசதி செய்தால் பலர் அவற்றைப் படிப்பார்கள். அவர்கள் மூலம் அந்த அறிவு தமிழுக்கு வந்துவிடும். ஆதலால் இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

தமிழிலே பாடங்களைப் படிப்பது பற்றிப் பொது மக்கள் மனதிலும் சந்தேகம் இருக்கிறது. அரசியல் பாஷையாக ஆங்கிலம் இருக்கிறது. நீதிஸ்தலத்திலும் பொது ஸ்தலங்களிலும் இன்று ஆங்கிலத்திலேயே விவகாரங்கள் நடக்கின்றன. அவ்வாறிருக்கத் தமிழில் கற்றுக் கொள்வதால் பிரதிகூலமாகத்தானே இருக்கும் என்று மக்கள் நினைக்கிறார்கள். அரசாங்கம் ஓரளவிற்கு இந்த அபிப்பிராயத்தை மாற்றி விடலாம். மாகாண விவகாரங்கள் அன்றி மற்ற தாலூக்கா, ஜில்லா, முனிசிபாலிடி முதலியவற்றில் நிர்வாக நடைமுறைகளெல்லாம் தமிழிலேயே இருக்கும்படி உடனே ஏற்பாடு செய்யலாம். அம்மாதிரி செய்தால் தமிழில்தான் இனிமேல் எல்லாம் நடைபெறப் போகிறதென்று மக்கள் உணர்ந்து கொள்ளுவார்கள்.

அதன் மூலம் ஆங்கில மோகமும் குறைந்து போகும். மாகாண நடைமுறைகளை உடனே இன்று தமிழுக்குக் கொண்டு வர முடியாதென்றாலும் அதன் கீழுள்ள பிரிவுகளில் கொண்டு வருவதில் யாதொரு இடைஞ்சலும் இல்லை.

ஆங்கிலம் உலகப் பொது மொழியாக இருக்கிறது.

அதை நாம் விடக் கூடாது என்று சிலர் வாதிக்கிறார்கள். மேல் படிப்புக்கு வெளிநாடு செல்ல வேண்டுமானால் அதற்கும் ஆங்கிலம் வேண்டும் என்கிறார்கள். இக்காரணங்களைக் கொண்டு ஆங்கிலத்திலேயே பாடங்களை நம் நாட்டில் கற்றுக் கொடுக்க வேண்டுமென்று சொல்லுவது சரியல்ல. ஆங்கிலத்தை ஒரு உப பாஷையாகக் கல்லூரிகளிலே கற்றுக் கொள்ளலாம் என்று முன்பே கூறினேன். பாடங்களை ஆங்கிலத்தில் கற்பிப்பதற்கும் இதற்கும் எத்தனையோ வித்தியாசமுண்டு. மேலும் உலகப் பொது மொழி அனைவருக்கும் அவசியமில்லை. அதுமட்டுமல்ல. மேல் படிப்புக்கு வெளிநாடு செல்லுபவர்கள் இனிமேல் ஆங்கிலம் பேசும் நாட்டிற்கே செல்வார்கள் என்று கிடையாது. அவர்கள் தாங்கள் மேற்கொண்டு படிக்க விரும்பும் விஷயத்திற்கு இணங்க அதில் பெரிதும் முன்னேற்றமடைந்துள்ள ஒரு நாட்டிற்குச் செல்லலாம். அது பிரான்சு, ஜெர்மனி, ஜப்பான் முதலான எந்த நாடாகவும் இருக்கலாம். அப்படிச் செல்ல விரும்புபவர்கள் மிக மிகச் சிலராகத்தானிருப்பார்கள். அவர்கள் அந்தந்த நாட்டுப் பாஷையைச் சுலபமாகக் கொஞ்ச காலத்தில் கற்றுக் கொள்ள முடியும். ஆதலால் இக்காரணங்கள் பெரியதோர் இடையூறல்ல. மேலும் வெளிநாடு செல்லும் ஒரு சிலருக்காக இங்கு அனைவரும் வேற்று மொழிகளில் பாடங்களைப் படிக்க வேண்டும் என்பது சரியாகாது.

ஹைஸ்கூலில் ஆங்கிலத்திற்கே இடமிருக்கக் கூடாது என்று காந்தியடிகள் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள். "எனக்கு ஆங்கிலத்தின் மேல் துவேஷமில்லை. ஆனால் நமது அடிமை மனப்பான்மை ஒழிய வேண்டுமானால் பத்தாவது வரை ஆங்கிலமே இருக்கக் கூடாது; நமது மொழிகளிலேயே எல்லாம் கற்கலாம் என்ற உணர்ச்சி உடனே உண்டாகவேண்டும். ஆங்கிலத்தை ஒரு உபமொழியாகக் கல்லூரியில் வைத்துக் கொள்ளலாம். இவ்வாறு செய்ய நாம் உடனே முன்வராவிட்டால் நாட்டில் அறிவு நிலையை உயர்த்த முடியாது" என்று அவர் பூனாவில் நடந்த கல்வி மந்திரிகள் மகாநாட்டில் அழுத்தந்திருத்தமாகக் கூறியிருக்கிறார்கள்.

ஆதலால் இவற்றையெல்லாப்
சிந்தித்து நாம் நமது கல்வி முறை
யை மாற்ற வேண்டும். உடனே
ஆங்கிலத்தை அடியோடு எல்ல
இடங்களிலும் ஒழித்துவிட
வேண்டுமென்று யாரும் கூறுவ
தில்லை. ஆனால் இன்றே நா
அதற்கு முனைந்தோமானால் தா
இந்திய அரசாங்கக் கல்வி மந்தி
கூறியிருப்பது போல் ஐந்து வ
டங்களிலல்ல பத்து வருடங்க
லாவது எல்லாம் தமிழ் மயமாக்
முடியும். அதற்கு வேண்டிய தி
டங்களை அரசாங்கமும் கல்வி நி
ணர்களும் வகுத்து அமுலுக்கு
கொண்டு வருவது இன்றை
முதல் வேலை என்று நான் கரு
கிறேன்.

நான் ஆரம்பத்திலேயே கூறி
படி வெகு காலம் அடிமைப்பட்டு
கிடந்ததால் மலைப்பை உண்டா
கும் பல பிரச்னைகள் நம் மு
தோன்றியுள்ளன. அவற்றை
தீர்க்கத் துணிச்சலும் திட
வேண்டும். நிதானம் நிதான
என்று கூறிக் கொண்டு ஒரு அ
கூட எடுத்து வைக்காவிடில் மு
னிருந்த இடத்திலேதான் இரு
வேண்டும். நமது கண் முன்
கவே ஜப்பான், ருஷியா முதல
நாடுகள் தங்கள் தாய் மொழிக
லே எல்லா விஞ்ஞான அறி
களையும் வெகு சீக்கிரத்தில் ம
ளுக்கு அளித்திருக்கின்ற
அவைகள் கையாண்ட முறை
நல்ல முன்மாதிரியாக இருக்கி
றன. அவற்றை நமக்கு ஏ
முறையில் பயன்படுத்தி
கொண்டு நாம் தாய் மொழி
உயர்தரக் கல்வியளிக்க உட
திட்டமிட்டு வேலை தொட
வேண்டும்,

(திருச்சி வானொலி நிலையத்தா
அனுமதியுடன் வெளியிடப்படுகி

# ஜெய் ஹிந்த்

பெ. தூரன்

1

அன்னை கையின் விலங்ககன்ற
அருமை நாளும் வந்தது

ஆடிப்பாடி வாழ்க வென்று
ஆர்ப் பரித்தே ஓதுவோம்

பொன்னின் மகுடம் இந்தியத் தாய்
புனைந்த நாளும் வந்தது

போற்றிப் பாடி ஜெய் ஹிந் தென்று
பூமி யதிர முழங்குவோம்.

2

பாரதத்தின் சிறுமை யெல்லாம்
பஞ்சு போலப் பறந்ததே

பாருக் கெல்லாம் கண்ணிதென்று
பகரும் நாளும் வந்ததே

வீர தீரம் அன்பு ஞானம்
மிகுந் திருக்கும் மக்கள் யாம்

மெய்ம்மை நூல்கள் பலவுங் கண்ட
மேலோர் வழியில் வந்தவர்



3

அடிமை வாழ்வில் நைந்த போது
ஆன சிறுமைக் குறை யெலாம்
அகல வென்று திறமை யோடு
அற்புதங்கள் ஆற்றுவோம்
மிடிமை கொன்று கொடுமை நீக்கி
வேந்தர் போல வாழுவோம்
விந்தை யென்றே உலகம் போற்ற
மேன்மை யாவும் காணுவோம்

4

மனிதர் யார்க்கும் பொதுநல் நீதி
வாழ்க்கை இன்பம் பொதுவிலே
மனிதர் யார்க்கும் பொதுநல் உடைமை
வழங்கி யன்பு கூட்டுவோம்
கணித ஞானம் கலைகள் ஞானம்
கவிதை ஞானம் ஓங்கவே
கடவுள் என்னும் உலகின் சக்தி
காணும் ஞானம் ஓங்கவே

5

செயல் பெருக்கி மயல் கருக்கித்
தீமை போக்கி வாழுவோம்
சிந்தை விரிவில் தோன்றுங் கனவைச்
செய்து காட்டி மகிழுவோம்
புயல் வெடித்த காடு போலப்
புன்மை வீழச் சாடுவோம்
புனித பாரதத்தை யென்றும்
போற்றி ஒன்றாய்க் கூடுவோம்.





# எழுத்தாளர்களுக்கு .....

வணக்கம். காலச்சக்கரத்திற்குப் பலர் எழுத்தோவியங்கள் அனுப்புகிறீர்கள். மிக்க மகிழ்ச்சி, இந்த மகிழ்ச்சியை எங்களுக்குத் தருகிற போது, பல சங்கடங்களையும் சேர்த்து அனுப்பி விடுகிறீர்கள். அப்படிச் சங்கடங்கள் ஏற்படா வண்ணம் நீங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். அதற்கு உதவியாகச் சில கூற விரும்புகிறோம்.

1. எழுத்தோவியங்களைக் காகிதத்தின் ஒரே பக்கத்தில் தான் எழுதியனுப்ப வேண்டும். இரண்டு பக்கங்களிலும் எழுதியனுப்பினால் நிச்சயமாகக் கவனிக்கப்பட மாட்டா.

2. பலர் ஒரு வரிக்கு மேல் வரியை எழுதியனுப்புகிறார்கள். சிலர் எழுதுவதில் இரண்டு வரிகளும் பின்னிப் பிணைந்து விடுகின்றன. இப்படியெல்லாம் இல்லாமல் வரிக்கு வரி விலாசமாக இடம் விட்டுத் தெளிவாக எழுதியனுப்புங்கள்.

3. சிலர் பென்சிலாலேயே எழுதியனுப்பி விடுகிறார்கள். அவை கண்டிப்பாகக் கவனிக்கப்படமாட்டா.

4. உங்கள் விலாசத்தை எழுத்தோவியத்தின் ஆரம்பப் பக்கத்தின் இடது கோடியில் தெளிவாக எழுதியனுப்ப வேண்டும்.

5. அவ்வப் போது அரசியல் முக்கியத்துவம் பெறும் விஷயங்களைப் பற்றிய விரிவான கட்டுரைகள், சமூக சூழல்களைச் சித்தரிக்கும் கதைகள், ரசமான கடிதங்கள் முதலியவற்றை எழுதியனுப்புங்கள்.

அன்பு,

ஆசிரியர்கள்

# காலச்சக்கரம்



(ஞாயிறு தோறும் வெளிவரும் வாரப் பத்திரிகை)

## பொருளடக்கம்



காலச்சக்கரத்தில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

# மதி மயக்கமும் மது மயக்கமும்

பெ. தூரன்






முத்துச் சுடர் போல நிலவு. வானத்தில் மேகமொன்றுமில்லை. முழு நிலா தனது மோகன மந்திர வெண் கிரணங்களை அள்ளி வீசிக் கொண்டிருக்கிறாள். உலகம் அந்த மதி மயக்கத்திலே செயலற்று நீண்டு கிடக்கின்றது. கலந்தவர்க் கினியதோர் கள்ளுமாய், பிரிந்தவர்க்குயிர் சுடு விடமுமாய் என்ற கவிதை வரிகளின் முழு வேகத்தையும் இந்தச் சமயத்தில் தான் நன்கு உணர முடியும்.

எங்கும் அமைதி. எங்கும் நிசப்தம். அந்த நிசப்தத்தை அதிகப்படுத்துவது போல இடையிடையே குயிலொன்று தன் காதலியைக் கூவியழைக்கும் இன்குரல் கேட்கின்றது. நீங்கள் முழுநிலா ஒளியிலே குயிலின் காதல் பேச்சைக் கேட்டிருக்கிறீர்களா? ஆஹா! அதற்குத்தான் எவ்வளவு இனிமை. காவிரியாறு கூடத் தன் சலசலப்பை அடக்கிக் கொண்டு இந்த இன்னிசையைக் கேட்டுக் கொண்டிருக்கிறது. நள்ளிரவிலே ஆறு தூங்கும் என்று சொல்லுவார்கள். அது மெய்தான் போலிருக்கின்றது. ஏனெனில் நீரிலே ஓட்டமே தெரியவில்லை! வெண் மணல் மேடும், தண்புனல் பரப்பும் அமுத வெண்ணிலவிலே கட்டுண்டு கிடந்தன. நானும் அந்த நிலையிலேதான் மணல் மீது படுத்திருந்தேன்.

நிலவொளியிலே இயற்கையழகைக் கண்டு அனுபவிப்பதிலே எனக்கு அளவற்ற ஆசை. அதிலும் காவிரிக்கரையென்றால் எனக்கு ஒரு அலாதியான இன்பம். காவிரி அன்னையின் கரையிலிருந்துதானே நான் எத்தனையோ கவிதைக் கனவுகள் கண்டிருக்கிறேன். அந்தத் தாயின் மார்பு சுரந்த அமுதம் போன்ற தீஞ்சுவைத் தண்ணீரிலே விளைந்த செந்நெல் சோற்றை உண்டல்லவா நான் வளர்ந்திருக்கிறேன்.

பல ஆண்டுகளாகக் காவிரியாற்றை விட்டுத் தொலைவிலே நானிருந்தாலும் சமயங் கிடைத்த போதெல்லாம் அதன் நீரருகே சென்று இயற்கை இன்பங்கண்டு களிக்க நான் பின் வாங்குவதில்லை. அந்த ஆசையில்தான் இந்தப் பௌர்ணமி இரவில் நான் வெள்ளிய ஆற்று மணலிலே படுத்துக் கொண்டிருக்கிறேன்.

நிலா பாடுவதாகக் கம்பன் கூறுகிறான். ஷேக்ஸ்பியர் கூறுகிறான். அது உண்மைதான் என்று எனக்குத் தோன்றியது. நிலவு பொழியும் அமுதே பாட்டு என்று மற்றொரு கவி பாடியிருக்கிறான். ஏகாந்தத்திலே, அமைதியிலே, அரவமற்ற நிலையிலே ஒரு இசை கேட்கின்றது. அந்த மோன இசையில் நான் லயித்து விட்டேன்.

எவ்வளவு நேரம் அப்படியிருந்தேனோ தெரியாது—திடீரென்று தண்ணீரிலே ஏற்பட்ட அரவத்தைக் கேட்டு நான் கூர்ந்து கவனித்தேன். யாரோ ஒரு இளமங்கை தண்ணீருக்குள் நடந்து கொண்டிருந்தாள். அசைவில்லாமல் படுத்திருந்தேனாதலால் அவள் என்னைக் கவனிக்கவில்லை என்று நான் அறிந்து கொண்டேன், அகாலத்தில் அவள் அங்கு வந்தது எனக்கு ஆச்சரியத்தையும் கலக்கத்தையும் உண்டு பண்ணியது.

அவள் முழங்காலளவு தண்ணீரில் நின்றாள். கையெடுத்து மேற்கு நோக்கிக் கும்பிட்டாள். "கோட்டை மாரியம்மா, என்னை உன் பாதத்தில் சேர்த்துக் கொள், இனிமேல் இந்த வேதனை தாங்க முடியாது" என்று சோகங் கலந்த குரலில் தோத்திரம் செய்தாள். எனக்கு அவள் எண்ணம் தெரிந்து விட்டது. அவள் தற்கொலை செய்து கொள்ள வந்திருக்கிறாள்.

நான் எழுந்து அருகே செல்வதற்குள் அவள் ஆற்றிற்குள் மேலும் இரண்டு மூன்று அடி வைத்து விட்டாள். நானும் வேகமாக ஓடினேன். சப்தம் செய்தால் அவள் விரைந்து ஆழமான இடத்தில் பாய்ந்து விடுவாள் என்று எனக்குப் பயம்.

எப்படித் தண்ணீரில் தாவினேன், எப்படி அவள் கையைக் கெட்டியாகப் பிடித்து மேலே இழுத்து வந்தேன் என்றெல்லாம் சொல்ல எனக்கே தெரியவில்லை. அம்மங்கையை உயிருடன் மணல் மேட்டிற்குக் கொண்டு வந்ததென்னவோ உண்மை. காரியம் அவ்வளவு விரைவாக நடந்து விட்டது.

வயது பதினெட்டு இருக்கும். இளமையும் வனப்பும் வாய்ந்த மங்கையாகக் காணப்பட்டாள். அவள் என்னை வெறுப்போடு

# மதி மயக்கமும் மது மயக்கமும்

பார்த்தாள்; பிறகு தேம்பித் தேம்பி அழுதாள். "என்னை எதற்காக இப்படித் தடுத்தீர்கள்? சாகப் போனாலும் என் பாவம் என்னைத் தடுக்கிறதே" என்று விம்மிக் கொண்டே அரற்றினாள்.

"ஏனம்மா இப்படிச் சிறு வயசில் உயிரைப் போக்கிக்கொள்ள நினைக்கிறாய், இது கடவுளுக்கு அடுக்குமா?" என்று நான் மெதுவாகக் கேட்டேன்.

"பிறகு எத்தனை நாளைக்கு இந்தத் துன்பத்தைப் படுவது? கொண்டவன் நல்லவனாக இல்லாவிட்டால் பெண்ணுக்கு உலகத்திலே சுகமேது?" என்றாள்.

அவள் கழுத்திலே தாலி மின்னுவதைக் கவனித்தேன். கன்னத்திலே வழிந்த கண்ணீரைத் துடைக்க அவள் கையை மேலே தூக்கினாள். அந்தக் கை மணிக்கட்டு வரையில் தீய்ந்து கிடப்பது அப்பொழுதுதான் தெரிந்தது. நான் திடுக்கிட்டு, "ஏனம்மா, கையில் என்ன.........?" என்று தயக்கத்தோடு கேட்டேன். அவள் மறுபடியும் விம்மலானாள். அவளால் துக்கம் தாங்க முடியவில்லை. நான் சமாதானப் படுத்த முயன்றேன். கை வெந்து போயிருப்பதன் காரணத்தைச் சொல்லும்படி மேலும் வற்புறுத்தினேன்.

"சாராயம் பெட்டியிலே இருக்குது. எடுத்தா' என்று என் வீட்டுக்காரர் சொன்னார். நான் எடுத்துக் கொண்டு போக மறுத்தேன். அதனால் கோபம் வந்து விட்டது. சாராயத்தைக் குடித்து விட்டுக் குடிவெறியிலே கொள்ளிக் கட்டையை எடுத்து 'இந்தக் கையா எடுத்துவர மாட்டேனென்றது' என்று தீயை வைத்தார்" என்று சொல்லிக் கொண்டே 'கோ'வென்று கதறினாள்.

எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. என்ன சொல்வதென்றும் தெரியவில்லை. "இப்போ சாராயம் ஏது? மதுவிலக்குச் சட்டம் வந்து விட்டதே" என்று ஏதாவது பேச வெண்டுமென்று கேட்டேன்.

"மதுவிலக்குச் சட்டம் வந்து நாசமாய்ப் போச்சு, அந்தக் கரையிலே காய்ச்சிய கள்ளச் சாராயம் ஏராளமாய் வருதே. கேள்வியா முறையா...?"

"ஏன் இதையெல்லாம் தடுக்க போலீஸ் இல்லையா என்ன? காங்கிரஸ் சர்க்காரில் அப்படியெல்லாம் நடக்காதே?"

"காங்கிரஸ்காரனா போலீசில் இருக்கிறான்? பழைய ஆட்கள் தானே அங்கே இருக்கிறார்கள்? போன வாரம் மாரியம்மன் பொங்கல் நடந்தது. அந்தச் சமயத்திலே திருட்டுச் சாராயம் வருவதைப் பிடிப்பதற்காகச் சர்க்கார் அதிகாரிகள் வந்திருந்தார்கள். கடைசியிலே என்ன நடந்தது? சர்க்கார் ஆள்களிலே நாலு பேர் குடிவெறியிலே உருண்டு கிடந்தார்கள். ஊரே சிரித்து விட்டது"

"இதையெல்லாம் ஒருவரும் நமது மந்திரிகளுக்கு எழுதியனுப்பவில்லையா? எழுதியனுப்பினால் அவர்கள் கவனிக்காமல் இருக்க மாட்டார்கள்."

"யார் எழுதிப் போடுவார்கள்? ஊரிலே பெரிய பெரிய ஆசாமிகளெல்லாம் கள்ளச் சாராயம் விற்றுக் கொள்ளை லாபமடிக்கிறார்கள். எழுதிப் போட்டது வெளியில் தெரிந்தால் அவர்களுடைய விரோதம் வரும். அதுவுமல்லாமல் மேலதிகாரிகள் விசாரிக்க வருவதற்குமுன் எல்லாம் ஒளித்து வைத்து விடுகிறார்கள். அவர்கள் வருகிற விஷயம் முன்னாலேயே எப்படியோ தெரிந்து விடுகிறது. பிறகு பணக்காரர்கள் பகைதான் மிச்சம்."

"காங்கிரஸ்காரர்கள் ஊரில் இருப்பார்களே, அவர்கள் மேலதிகாரிகளைக் கூட்டி வந்து இவர்களைப் பிடித்துக் கொடுக்கலாமே?"

"ஆமாம், நல்லாச் சொன்னீர்கள். அதிகாரிகள் அவ்வளவு சுலபமாக வந்து விடுவார்களா? இப்படித்தான் ஒருத்தர் போய்ச் சொன்னாராம். சரி வருகிறேன், கார் கொண்டு வந்திருக்கிறாயா?" என்று அதிகாரி கேட்டாராம். இனிக் காருக்கு அவர் எங்கே போவது?"

எனக்கு மேலும் பேச ஒன்றும் தோன்றவில்லை. "அம்மா, என்ன இருந்தாலும் உயிரை மாய்த்துக் கொள்வது பாபம்" என்றேன்.

"இந்தப் பாபமெல்லாம் சர்க்காரைச் சேரட்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். நம்ம அரசாங்கம் வந்தும் இந்தத் துன்பமா?" என்றாள் அவள்.

நன்கு விஷயம் தெரிந்தவளாகக் காணப்பட்டாள். அவளைப் பேச்சில் வெல்ல என்னால் முடியவில்லை.

"காங்கிரஸ் சர்க்கார் வந்து விட்டாலும், அதிகாரிகள் பழைய ஆட்கள் தானே? அவர்களில் சிலர் குடித்துப் பழகியவர்கள். உடனே அந்தப் பழக்கம் மாறுவதென்றால் ஆகிறதா? ஏதோ இன்னும் சில காலம் இப்படி இருக்கும். பிறகு எல்லாம் சரியாகப் போய் விடும். அதுவரை நீ பொறுத்திரம்மா. உனக்குக் கடவுள் அருள் செய்வார்" என்று உபதேசம் செய்தேன்.

தற்கொலை செய்து கொள்வதென்றால் சுலபமல்ல. ஏதோ ஒரு கலக்கத்தால் திடீரென்று அப்படியெல்லாம் தோன்றும். அந்தச் சமயம் மாறி விட்டால் பிறகு பயம் தோன்றிவிடும். அதன் பின் தற்கொலை செய்து கொள்ள முடியாது. அம்மாதிரியான நிலை இம்மாதிற்கும் இப்பொழுது ஏற்பட்டு விட்டது போலும். அவள் "நான் வீட்டிற்குப் போகிறேன். தெய்வம் விட்டபடி விடட்டும். இந்நேரத்திலே தனியாக இங்கு பேசிக் கொண்டிருந்தால் யாராவது கண்டால் என்னமாவது நினைப்பார்கள்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டாள்.

நான் ஆழ்ந்த சிந்தனையோடு படுத்தேன். கொஞ்ச நேரத்தில் ஐந்தாறு ஆடவர்கள் அக்கரையிலிருந்து ஆற்றிலிறங்கி வந்தார்கள். அவர்கள் பேச்சிலே வெறியிருந்தது. தோளிலே புட்டிகள் தொங்கின.

